[16th March 1959

SRI N. K. PALANISAMI : இந்த மாணவர்களைத் தேர்ந்தெடுக்க ஏற்படுத்தப்பட்டிருக்கும் கமிட்டிகள் ஒவ்வொரு காலேஜிலும் ஏற்படுத்துவதாகத் திட்டம் இருக்கிறதா ?

MR. SPEAKER : இந்தக் கேள்வியில் இருந்து இது எழவில்லையே.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒரே ஒரு கமிட்டி தான் வேலை செய்து வருகிறது.

SRI V. SUBBIAH : சார், இந்த நாட்டிலே விவசாய உற்பத்தி பெருக வேண்டுமென்று சொல்லக்கூடிய நேரத்திலே விவசாயப்பட்டதாரிகள் குறைவாக இருக்கிறார்கள். விவசாயக் கல்லூரிகளில் அந்தப் பட்டதாரிகள் எத்தனை பேர் அதிகப்படுத்தப்பட்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தப் புள்ளி விவரங்கள் என்னிடம் இல்லை. அதிலும் அதிகப்பட்டிருக்கிறது என்பதைக் கனம் அங்கத்தினர்கள் உணர்ந்திருப்பார்கள்.

*Appointment of women as Block Development Officers*

* 821 Q.—SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

இதுவரை பெண்களை B.D.O.-வாக எடுத்திருக்கிறார்களா ? இல்லாவிடில் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No Sir. If and when suitable women candidates are available their cases will no doubt be considered.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : சமுதாய நலத் திட்டம் 3 லட்சம் முதல் 5 லட்சம் வரை பெண்களிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. திட்டவேலைகள் வெற்றிகரமாக நடந்து வருகின்றன. சமுதாய நல பி.டி.ஓ.க்கள் பதவி பெண்களுக்கும் கொடுக்கப்படுமானால் அவர்கள் அந்தப் பதவியை ஏற்று திட்டமாக நல்ல முறையில் சமுதாய நலத் திட்டங்களை நிறைவேற்றுவார்கள் என்ற காரணத்தால் அவர்களுக்கும் அந்தப் பதவியைக் கொடுக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அவர்களை அமர்த்தினால் திறமையாகச் செய்வார்கள். அதற்குத் தக்க பெண்கள் முன்வர வேண்டும்.

SRI V. K. KOTHANDARAMAN : "Women Welfare Officer"கள் ஆக தகுதியுள்ள பெண்கள் நியமிக்கப்பட்டிருக்கிற நேரத்தில் வேலூரில் சமீபத்தில் நடந்த 3 ஜில்லாக்களைக் கொண்ட சமுதாய நலக்கூட்டத்திலே பெண்கள் பி.டி.ஓ.க்களாக நியமிக்கப்படவேண்டுமென்று ஏகமனதாகத் தீர்மானம் போட்டிருக்கிறார்கள். அதைப் பற்றி உடனடியாகப் பரிசீலனை செய்யப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தீர்மானம் போடுவது வேறு. அதற்குத் தகுதியுள்ள பெண்கள் வரும்போது அவர்களை எடுத்துக்கொள்ள முடியும். தகுதியுள்ள பெண்கள் வரும்போது இதைப் பற்றிக் கவனிக்கப்படும்.

SRI A. A. RASHEED : What are the qualifications prescribed for the post of Block Development Officers?

THE HON. SRI C. SUBRAMANIAM : A separate question may be put.

16th March 1959]

SRI M. JAGANNATHAN : May I know whether so far any women applied for these posts of Block Development Officers?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is no question of application. As a matter of fact, Block Development Officers are selected from the existing cadres in the Revenue, Co-operation, Agriculture, etc., departments. Unless women officers are available in those departments, we cannot select them as Block Development Officers. But hon. Members may be aware that an hon. Member of this House was some time in charge of the Athur Block and that she did her duties fairly well to the satisfaction of everybody.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : தலைவர் அவர்களே, தகுந்த காண்டிடேட்டுகள் வருவார்களானால் யோசிக்கப்படும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இப்போது இருக்கக் கூடிய பிளாக் டெவலெப்மெண்ட் ஆபீஸர்களில் சில பேர்களை எஸ்.ஈ.ஓ.-க்களிலிருந்து புரோமோஷன் செய்து அமர்த்தியிருக்கிறார்கள். பெண் எஸ்.ஈ.ஓ.க்களாக பிளாக்குகளில் வேலை செய்பவர்களை பிளாக் ஆபீஸர்களாகப் போட சர்க்கார் முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதே பதிலைத்தான் கொடுக்க வேண்டியிருக்கிறது. தகுதியுள்ளவர்கள் இருந்தால் அதைப் பற்றி கவனிக்கப்படும்.

### *Educational concessions*

*825 *Q.*—SRI T. VELUCHAMI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தய செய்து பதிலளிப்பாரா—

(அ) என்.ஜி.ஓக்களின் குழந்தைகளுக்கு கல்விச் சலுகை அளிப்பதற்கான வருமான வரம்பை அதிகப்படுத்துவதற்கு ஏதேனும் உத்தேசமுண்டா ?

(ஆ) இல்லை என்றால், ஒரு குறிப்பிட்ட எண்ணிற்கு அதிகமாகக் குழந்தைகளைப் படிக்க வைக்கவேண்டிய என்.ஜி.ஓக்களுக்கான வருமான வரம்பை அதிகப்படுத்துவது பற்றி சர்க்கார் யோசிக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) There is at present no income limit fixed for the grant of educational concessions to the children of N.G.Os. The children of all N.G.Os. are eligible for fee concessions without any limit as to their number.

*826 *Q.*—SRI T. VELUCHAMI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

கல்விச் சலுகைகள் அளிக்கும் விஷயத்தில் எந்தெந்த சமூகத்தாருக்கு எந்தெந்த விதமாக கல்விக்கு வருமான வரம்பு கவனிக்கப் படுவதில்லை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The grant of fee concessions under the Madras Educational Rules is subject to the condition that the annual income from all sources of the parents or guardians of the pupils does not exceed Rs. 1,200 in the case of schools and Rs. 1,500 in the case of college courses in respect of all eligible communities. No discrimination on communal grounds is made in the matter of income limit of parents.